உ

ஓம் கார கணபதி துணை

# அருட்சட்ட வளர்ச்சிக்கு வித்திட்ட ஆன்றோர்கள்



ஸ்ரீ அருள் சக்தி அன்னை

நரசிம்மலு நாயுடு.

மாம்பலம் ஸ்வாமிகள்

இராமலிங்கனார்

மாம்பலம் தாய

பாலகவி வேங்கடராமன்

வைத்தியநாதன

ஆதிதாசன

பங்காரு ரெடடியாா

சரவணபபிள்ளை

R.D.சுபபராம ரெடடியாா

வெளியிடுவோர்:

பாக்கம் திரு. முத்துராமரெட்டியார்

மணிவிழாக் குழுவினர்

பிள்ளையார் குப்பம



ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள்



ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னை

# மணி விழா காணுவோர்



M. தனலஷ்மி அம்மாள் G. முத்துராம ரெட்டியார்

## விழாக் குழுவினர்

Sri. S. சுப்பிரமணியன், சென்னை.

Sri. P.R. வரதராஜுலு , கும்பகோணம்.

Sri. G. பாலகுரு, கும்பகோணம்.

Sri. V. சுவாமினாதன், ஆரணி.

Sri. K.S. கிருஷ்ணமூர்த்தி, சென்னை.

Sri. S.P. மூர்த்தி, சென்னை.

Sri. V. சம்பத்குமார், சென்னை.

ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் துணை



# ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள்

ஸ்ரீமுக ஆண்டு ஆடித்திங்கள் 29-ம் நாள் *(13-8-1993)*

ஸ்ரீலஸ்ரீ அருள் சக்தி அன்னை ஆஸ்ரமத்தில்
திருவார் திரு முத்துராமரெட்டியாரின் அறுபது ஆண்டு
நிறைவு நன்னாளில் இந்நூல் வெளியிடப்படுகிறது.

**வெளியிடுவோர்:**

திரு. முத்துராம ரெட்டியார் மணிவிழாக் குழுவினர்
பிள்ளையார் குப்பம் (வழி) பாகூர்
கடலூர் - R.M.S. 607 402.

ஸ்ரீ குருபாதம் துணை

# பரிந்துரை

"நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலமிக்க
நல்லார்சொல் கேட்பதுவும் நன்றே; நல்லார்
குணங்கள் உரைப்பதுவும் நன்றே; அவரோ(டு)
இணங்கி இருப்பதுவும் நன்று."

என்பதற்கிணங்க இந்த மணி விழா நன்னாளிலே அருட்சட்ட வழிக்கு வித்திட்ட ஆன்றோர் பணிகளை நினைவு கூறுவது சாலச் சிறந்ததாகும். இந்த நூல் இனி வரும் சந்ததிகளுக்கு ஒரு நல்ல பயனுள்ள நூலாக அமையும் என்பதில் ஐயமில்லை. இப்படிப்பட்ட ஒரு சிறந்த நூலுக்கு பரிந்துரை எழுதும் பாக்கியம் கிடைத்ததை ஒரு நல்ல வாய்ப்பாக எண்ணி மகிழ்கிறேன்.

ஒரு இக்கட்டான மிகுந்த சோதனைக்குள்ளான சமயத்தில் தன் தமையனார் அறிவுரையின்பேரில் ஓர் சிறந்த மகானின் வழியிலிருந்து மாறி நம் ஆண்டவர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகளின் வழியான அருட்சட்டத்தை எனது தந்தையார் 1947ல் ஏற்றுக்கொண்டார்கள். அப்போதெல்லாம் எங்களுக்கு, உடல் உபாதையோ, அல்லது ஏதாவது வாழ்க்கை இன்னலோ ஏற்பட்டால் ஸ்ரீ ஆண்டவர் வழியாகிய "சட்டம்" ஏற்றுக்கொண்டால் சரியாகி விடும் என்று சொன்னதால் வயிற்றுப்போக்கு வந்தபொழுது அடியேன் சட்டம் எடுத்து நல்ல குணம் ஏற்பட்டதால் தொடர்ந்து நல்ல நெறியோடு இன்றும் உடையவன் வழியில் இருந்து வருகிறேன். அது முதல் எங்கள் குடும்பத்தாருக்கு அருட்சட்டத்தில் மிகுந்த ஈடுபாடு. பல சிறந்த அடியார்கள் எங்கள் இல்லம் வந்து செல்வார்கள். எங்களது தந்தையும் அருட்சட்ட அடியார்கள் பெருமையை எடுத்துக் கூறுவார்கள். அதுசமயம் ஸ்ரீலஸ்ரீ அன்னை அவர்களும் எங்கள் இல்லம் வந்து தங்கியிருந்திருக்கிறார்கள். அவர்கள் வந்த காலத்தில் எங்கள் வீட்டில் அடியார்கள் கூட்டம் நிரம்பி வீடே கோலாகலமாக இருக்கும். அப்படிப்பட்ட "அருட்சட்ட வளர்ச்சிக்கு வித்திட்ட ஆன்றோர்களின்" அரும் பணிகளை விவரித்து நூல் ஆக்கவேண்டும் என்ற உயர்ந்த எண்ணம் திரு. பாக்கம் சுவாமிகளுக்கு வந்தது மிகவும் போற்றத்தக்கதாகும்.

எனது தந்தையாரின் ஊக்கத்தால் ''தொண்டர் பணியின்'' பெருமையை அறிந்து கொண்ட தவத்திரு பாக்கம் ஸ்வாமிகள் அதை விடாமல் செய்து வருவதால் இன்று ஓர் ''ரத்னம்'' போல் பிரகாசித்து வருகிறுர். அம்மாதிரி அடியார்கள் பணியையே ஆண்டவர் பணியாக ஏற்று ஊண், உறக்கம் பாராமல், உடல் நலத்தையும் பொருட்படுத்தாமல் அவர் செய்யும் நற்பணியின் காரணமாகவே அவரிடம் முக்கிய பொறுப்பாகிய 'இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் சங்கத்தின்' செயலாளர் பொறுப்பை பல ஆண்டு களாக தரப்பட்டு அதையும் அவர் திறம்பட நிர்வகித்து வருகிறுர் என்று சொன்ஞல் அது மிகையாகாது.

''தொண்டர் பணி செய்பவர்கள் சூட்சாதி சூட்சமெல்லாம்
கண்டு தெளிவாரடி'' என்னும்

ஆண்டவர் அருள்வாக்கின்படி திரு பாக்கம் சுவாமிகள் ஆற்றி வரும் அடியார்கள் தொண்டின் காரணமாக சூட்சாதி - சூட்சமம் கண்டு தெளிந்து இறைவனின் பூரண அருளைப் பெறுவது திண்ணம். அவரது தொண்டு உள்ளம் கண்டு ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னை அவர்கள் பரிபூரண அனுக்கிரஹம் அளித்து, அவரது வாழ்க்கையில் ஏற்பட்ட பல இன்னல்களை சூரியனைக் கண்ட பனிபோல் விலக்கியுள்ளார்கள் என்பது அடியார்கள் அனைவரும் அறிந்ததே.

எல்லாம் வல்ல ஸ்ரீ பரிபூர்ண விஞயகர் அருளும், ஸ்ரீ ஸத்குரு இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் அனுக்கிரஹமும், ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னையாரின் அருளாசியும், தவத்திரு முத்துராம ரெட்டியார் தம்பதிகட்கு பூர்ணமாக கிடைத்து அவர்களது அரும்பணி தொடர பிரார்த்திப்போமாக.

வாழ்க, வளர்க! திருவருட்சட்டம்
அரும்பெரும் அடியார்கள்!

S. சுப்பிரமணியன்
(மேனேஜிங் டிரஸ்டி)
அருள்சக்தி அன்னை ஆஸ்ரமம்
பிள்ளையார்குப்பம்

## அருட் சட்டம்

உலகம் தோன்றிய நாள் முதல் உலகின் பல பாகங்களிலும் பல காலங்களிலும் அருளாளர் பலர் தோன்றி அருள் நெறி கண்டு, இன்பம் அடைந்துள்ளனர். தாம் பெற்ற பேரின்பத்தை பலரும் பெறவேண்டும் எனக் கருதி எல்லாம் வல்ல பரம்பொருளின் அருட் பெருங்கருணையே வடிவமாக தாங்கி அவதரித்தவர், ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள். வா.உ.சி. மாவட்டத்தில் புதூர், நாகலாபுரத்தை அடுத்துள்ள இரெட்டியப்பட்டி என்னும் திருத்தலத்தில் *1856*-ம் ஆண்டு (நளவருடம் புரட்டாசி மாதம் இரேவதி நட்சத்திரம்) நம்குருநாதர் "சுப்பிரமணியம்" என்ற திருநாமத்துடன் சைவ வேளாள மரபில் தோன்றினார். குற்றாலத்தில் உள்ள பொதிகை மலைக்குகையில் பல ஆண்டுகள் கடுந்தவம் புரிந்து ஸ்ரீ பரிபூர்ண விநாயகர் அருளால் ஞானம் பெற்றார்கள். தாம் பெற்ற பேரின்பத்தை எல்லா நாட்டினரும், எல்லா மொழியினரும், எல்லா இனத்தவரும், எக்காலத்திலும், எவ்வித தடையுமின்றி, எவ்வித வேறுபாடுமின்றி எளியமுறையில் பெற்றுய்ய வேண்டும் என்ற பெருங்கருணையுடன் "சட்டம்" என்ற ஒரு சிறந்த செந்நெறியை வகுத்தருளினார். இல்லறத்தில் இருந்து கொண்டே மோட்சநெறியை சுலபமாக கைக்கொள்ள ஏற்ற இந்த "அருட்சட்டம்" இன்றும் பல ஆயிரக்கணக்கான மக்களுக்கு நிம்மதியான, ஆனந்தமான வாழ்க்கை வாழ்ந்திட வழி வகுத்துள்ளது என்றால் அது மிகையாகாது. இப்படிப்பட்ட "அருட்சட்ட" வழியில் அருள்வாழ்வு வாழ்ந்து மோட்சம் பெற்றவர் ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னை அவர்கள். மேலும் பல விளக்கங்களை பெற விரும்புவோர்கள் "வழிகாட்டும் வான்பொருள்" என்ற நமகுருநாதர் வாழ்க்கை வரலாறு நூலிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

*சென்னை-17.*
*9-8-93.*

K.S. கிருஷ்ணமூர்த்தி
அருள்சக்தி அன்னை இல்லம்.



ஸ்ரீ சாதுராம் ஸ்வாமிகள்

ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னையின்பாலும், ஸ்ரீ இரெட்டியப் பட்டி ஸ்வாமிகளின்பாலும் ஆழ்ந்த அன்பு கொண்டவரும் "இருடியர்பட்டி அருட்புகழ்" என்ற நூல் இயற்றியவரும் சட்ட அடியார்கள் இல்லம் சென்று லட்சார்ச்சனை விழாவை மிக அருமையாக நடத்திக் கொடுத்தும் "அருட்சட்ட" நெறியை மிகமிக அழகாக எடுத்து சொல்லி பலரும் அதன் வழி நடக்க வழிவகுத்தவரும், சமீபத்தில் ஸ்ரீ அருள் சக்தி அன்னை ஆஸ்ரமத்தில் 60 நாட்கள் தங்கி கோடி அர்ச்சனையை மிக அற்புதமாக நடத்திகொடுத்தவரும், நடமாடும் தெய்வமாக நம்மிடையே விளங்கி பல சந்தேகங்களைத் தீர்த்து நல்லாசி வழங்கி வருபவருமான

## தவத்திரு அருட்கவி ஸ்ரீ சாதுராம் ஸ்வாமிகளின் ஆசியுரை.

(சென்னை-600061, நங்கை நல்லூர்ப் பொங்கி மடாலய அதிபரும், ஸ்ரீலஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் ஸச்சிதாநந்த ஸ்வாமிகளின் சிஷ்யரும், திருத்தொண்டர் மாமணியும் ஆன அருட்கவி-தவத்திரு ஸாதுராம் ஸ்வாமிகள் அவர்கள் அருளியது). பிள்ளையார் குப்பம், புதுவை மாநிலம் - 13-8-1993.

ஸ்ரீ பொங்கி க்ருபா

புதுவை மாநிலம், பாக்கம் ஸ்ரீ G. முத்துராம ரெட்டியார் ஸ்ரீமதி M. தநலக்ஷ்மி அம்மாள் தம்பதிகட்கு ஷஷ்ட்யப்த்த பூர்த்தி (மணி விழா) உத்ஸவ நல்வாழ்த்துப்பா.

(அறுசீரடி ஆசிரிய வ்ருத்தம்)

1.

புதுவைமா நிலப்பாக்கம் ரெட்டியார் "முத்துராம்"
[புகல்பேர் கொள்வார்.
வதுவைசெய்து கொண்டமனை யாள்தநலட்சுமி அம்மாள்
[மணவாளக்கோன்,
விதுவைநிகர் முகப்ரேமா சந்த்ரசே கரன், ஸாந்த்தி
[ராஜேந்த் ரன், விள்
புதல்வன்ஸ்ரீ பாலகுரு இருமகளிர் ஒரேபுத்ரன்
[பூத்த தந்தை.

2.

திருஇருடிப் பட்டிஅடி களார் திருவ ருட்சட்டம்
[சேர்ந்த பக்த்தர்,
குருஅருளைப் பிள்ளையார் குப்பம்தாய் அருட்சக்த்தி
[கொடுக்கப் பெற்றார்,
தருதகப்பன் குருஸாமி ரெட்டியார் ஜயலகஷ்மித்
[தாய்க்கு மைந்தர்,
மிருகஸ்ரீ ரிஷம் ஆடி மாதம்ஸ்ரீ முகவருஷம்
[மெயாப்பி றந்தார்.

3.

அருட்சட்ட அநுஷ்ட்டாநம் விடாப் பிடியா அநுஷ்ட்டிப்பார்,
[அன்புள் ளத்தார்,
இரெட்டிப்பட் டிஸ்வாமி ஸங்கத்தின் செயலர்என
[இய்ங்கு கின்றார்,
அருட்சக்த்தி அன்னையின் பன்னிரண்டாவ தாம்குருபூஜையின்
[ஆண்டின்கண்
பொருட்பிள்ளை யார்குப்பக் கோடி அர்ச் சனைப்பூஜைப்
பொருட்டு ழைத்தார்.

4.

இந்தமுத்து ராமரெட்டி யார்பாக்கம் ரெட்.டியார்
[எனும்பேர் பெற்றார்
சந்தமணி விழா உக்ர ரதஸாந்த்தி ஷஷ்ட்யப்த்த
பூர்த்திச் சா(று) இன்(று)
எந்தைபரி பூரணராம் மதுரைவிநா யகர் அருளால்
[இனிதே கண்டு,
மைந்தர்மனை மகளிர்மரு மக்கள்குடும் பத்துடன்பல்
லாண்டு வாழி!

எண் 311, தடாகம் சாலை, வேங்கடபுரம்.
கோயமுத்தூர் - 641025.
**(3-8-1993)**

ஸாது ராம் ஸ்வாமிகள்.
25 ஆம் வெள்ளி விழாச்
சாதுர்மாஸ்ய வ்ரத
முகாம்.

## ஆக்கியோன் குறிப்பு

அருட்சட்ட வளர்ச்சிக்கு வித்திட்ட ஆன்றோர்கள் பலர் இருந்திருக்கிறார்கள். எல்லோரைப் பற்றியும் இங்கு எடுத்துக் கூற இடம் கிடைப்பது கடினம் என்பதால் மிகமிக முக்கியமானவர்களாக இருப்பவர்களைப் பற்றி அடியேனுக்கு தெரிந்த அளவில் எடுத்துக் கூற ஆசைப்படுகிறேன். அவர்களைப் பற்றிய முழு விபரங்கள் எழுத முடியாது என்பதால், ஆங்காங்கே அவர்கள் ஆற்றிய அருந் தொண்டினை மட்டும் கருத்தில் கொண்டு அதை தெரிவிப்பதால் பின்னால் வரும் சந்ததிகளுக்கு நல்ல பயன் கிடைக்குமே என்ற அவாக் கொண்டு இந்த சிறு நூலை நம் அருட் சட்ட அடியார்கள் என்னை உருவாக்க பணித்தமையால் நான் இதை எனக்கு தெரிந்த அளவில் சிறப்பாக அமைக்க எண்ணியுள்ளேன். குற்றம் குறைகள் இருப்பின் என்னை மன்னித்து அவைகளை நீக்கி மற்றதை மட்டும் ஏற்றுக் கொள்ள வேண்டுகிறேன். ஒன்றும் தெரியாத என்னையும் ஒரு பணியாளனாக ஏற்றுக் கொண்ட நம் **ஸ்ரீலஸ்ரீ** அருள் சக்தி அன்னையாரின் திருவடிக்கு என் பணிவன்பான வணக்கத்தை கூறி என் விளக்கத்தை ஆரம்பிக்கிறேன். இந்நூல் வெளியிட வழி வகுத்துத் தந்த மணி விழாக் குழுவினருக்கு என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

பாக்கம், G. முத்துராமரெட்டியார்.
*3-8-93.*

குருநாதர் திருவடி துணை

# முன்னுரை

"அருட்சட்ட வளர்ச்சிக்கு வித்திட்ட ஆன்றோர்கள்" என்னும் இந்த அரியநூல் அடியார் இல்லம் ஒவ்வொன்றிலும் இருக்க வேண்டிய நூலாகும். "அருட்சட்டம்" ஏற்படுத்திய நம் குருநாதர், "சட்ட அடியார்கள் அடிக்கடி ஒன்று சேர்ந்து சந்தேகங்களை தீர்த்துக் கொண்டு உடையவன் பெருமையை ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொண்டால்தான் சட்டம் வளர்ச்சி அடையும்" என்று சொல்லியுள்ளார்கள். அடியார்கள் மட்டுமே தெரிந்துக் கொள்ளக்கூடிய பல விஷயங்களை இந்த நூலில் எடுத்துக் கூறியுள்ளார்கள். பின்னால் வரும் சந்ததிகளுக்கு இந்நூல் நற்பயனாக இருக்கும் என்பதாலும், நல்ல பணிகள் செய்தவர்களை நினைவு கூர்ந்து அதன்படி பலரும் நடக்க வழி வகுப்பதே நாம் அவர்களுக்கு காட்டும் நன்றியாக அமையும் என்பதாலும் இப்படிப்பட்ட புத்தகங்கள் வெளிவருவது மிகவும் நல்லது.

திரு பாக்கம் முத்துராம ரெட்டியார் **ஸ்ரீலஸ்ரீ** அன்னையாரிடம் அளவு கடந்த பக்தியும் அன்பும் கொண்டவர். **ஸ்ரீலஸ்ரீ** அன்னையாரின் தாயர் திருமதி குயிலம்மை அவர்கள் ஊரும் பாக்கம் தான். இவர்களுடைய வீட்டிற்கு நான்காவது வீட்டில் வசித்து வந்தபோதே அவர்கள் குடும்பத்துடன் நல்ல நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. திருபாக்கம் ரெட்டியாரின் தாயாரும் அருட்சட்டம் ஏற்று வாழ்ந்தவர். சுமார் 45 ஆண்டுகளாக தொடர்ந்து அருட் சட்டத்தில் வாழ்ந்து வரும் திரு ரெட்டியார் தம்பதிகள் பல சோதனைகளை அனுபவித்துள்ளார்கள். தன் மகன், திரு. பாலகுருவிற்கு பால்கட்டி வந்து மிகவும் மோசமானநிலைவரை சென்று, பின்பு பிள்ளையார் குப்பம் எடுத்துச் சென்று கொஞ்சம் கொஞ்சமாக குணமானது., தன் பெரிய மகள் பிரேமாவின் கல்யாணத்திற்கு நகைகள் வாங்கி, அத்துடன் பணத்தையும் ஒரு பையில் போட்டு வைத்து அதை பஸ்ஸிலேயே விட்டு விட்டதை தன் ஊர் சென்ற பின்னர்தான் நினைவுக்கு வந்ததாம். அவ்வளவு பெரிய தொகையை இழந்தவர் மனம் என்ன பாடுபட்டிருக்கும்? **ஸ்ரீலஸ்ரீ** அருள் சக்தி அன்னை அருளால் அது பத்திரமாக ஒரு நண்பர் மூலம் திரும்பக் கிடைத்தது என்று உணர்ச்சிவசப்பட்டு சொல்கிறார் திரு. முத்துராம ரெட்டியார்.

தன் இளைய மகள் சாந்தி சிறுமியாக இருக்கும்போது, விளையாடிக் கொண்டே எதிரில் வந்த தாயுருடன் மோதிக் கொண்டபோது அவர்கள் கையில் வைத்திருந்த பாத்திரத்தில் உள்ள கொதிக்கின்ற சாம்பார் அந்த சிறுமியின் மார்பில் கொட்டிவிட்டது. உடனே அவர்கள் குழந்தையின் மார்பின் மீது தண்ணீர் விட்டதினால் நல்ல கொப்புளங்கள் ஏற்பட்டு ரணமாகி சீழ்வந்து படாதபாடு பட்டு, பின்பு அருள் சக்தி அன்னை ஆஸ்ரமம் சென்று நன்றாக குணமாகி திரும்பினார்கள். இப்படி எத்தனையோ சோதனைகள். அவருக்கே "பிளவு" என்ற பெரிய கட்டி முதுகில் வந்து பல மாதங்கள் கஷ்டப்பட்டு பிறகு குணமாகியுள்ளது. எது வந்தாலும் அஞ்சாமல் தன் குடும்பம் பூராவும் அருட் சட்ட வழியில் தீவிரமாக நடந்து வருவதற்கு வழி வகுத்தவர் நம் ரெட்டியார் சுவாமிகள். அவரைப் பலகாலமாக அறிந்த எனக்கு அவருடைய கடும் உழைப்பு எப்படி அருட் சட்ட வளர்ச்சிக்கு உதவியுள்ளது என்பது நன்கு தெரியும். இரெட்டியப்பட்டியில் நடந்த கோடி அர்ச்சனையும், சமீபத்தில் பிள்ளையார் குப்பத்தில் மிக சிறப்பாக நடந்தது முடிந்த கோடி அர்ச்சனையும் மற்றும் பல மகாகும்பாபிஷேகங்களும், அருட்சட்ட அடியார்கள் இல்ல லட்சார்ச்சனை விழாவும் அவரது பெரும் முயற்ச்சியால் நடந்து வந்துள்ளது என்று சொன்னால் அது மிகையாகாது. திரு பாக்கம் ரெட்டியார் அவர்கள் எல்லோரிடமும் மிகவும் அன்பு கொண்டவர், நாணயமானவர், நேர்மையானவர், கடமை தவறாதவர், காலத்தோடு எதையும் செய்ய வல்லவர். ஆட்களை வேலை வாங்குவதில் மிகவும் கெட்டிக்காரர், எந்த முடிவு எடுத்தாலும் நியாமானதாகவும், ஒருவரையும் பாதிக்காவண்ணமும், திடமாகவும் இருக்கும் என்பதால் எந்த பிரச்சனை வந்தாலும் எல்லோரும் இவரிடம் வந்துதான் நியாயம் கேட்பார்கள். அப்படி அந்த ஊர் மக்களுக்கும் அருட் சட்ட அடியார்களுக்கும் ஒரு நீதிபதியாக செயல்பட்டு வருகிறார் என்றால் அது தான் அவருடைய தனி சிறப்பு.

பாக்கத்தில் திரு ரெட்டியார் இல்லத்தின் வாயிலியே உள்ள கச்சேரி விநாயகர் கோவில் திருப்பணி செய்து குடமுழுக்கு நடத்தியதால் அவர் வாக்கில் அந்த விநாயகர் இருந்து கொண்டு நியாயம் வழங்குகிறாரோ என்றுகூட எண்ணத்தோன்றுகிறது.

ஸ்ரீமுக வருடம் ஆடிமாதம் மிருகசீரிஷம் நட்சத்திரத்தில் தோன்றிய திரு. முத்துராமரெட்டியார் ஸ்வாமிகள் தன் திருமதி. தனலஷ்மி அம்மாளோடு பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்து இன்னும் பல அறிய செயல்களை செய்ய வேண்டும் என்று மனமார பிராத்தித்துக் கொள்கிறேன்.

ஒவ்வொரு வெற்றி கொண்ட ஆணுக்கும் பின்னால் ஒரு பெண் இருப்பாள் என்ற ஆங்கில பழமொழிக்கு ஏற்ப அவருடைய அருமை மனைவி திருமதி தனலஷ்மி அம்மாள் தான், நம் ரெட்டியார் சுவாமிகளின் வெற்றிக்கு காரணமானவர்கள். அவர்களுடைய தாயளகுணமும், வீட்டை நிர்வகிக்கும் சாமர்த்தியமும் அடியார்களிடம் காட்டும் அபரிமிதமான அன்பும் தான் ரெட்டியார் ஸ்வாமிகள் பொதுச் சேவையை செய்ய வழி வகுத்துள்ளது என்பது அவர்களிடம் நெருங்கி பழகியவர்களுக்கு மட்டுமே தெரியும்.

**உடையவள் திருவடி நிலையம்**
***ஆரணி (தி. ச. மாவட்டம்)***
*3-8-93.*

**V. சுவாமிநாதன், ஆரணி**

ஓம் ஸ்ரீ. இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை.

## அணிந்துரை

பூவுலகுய்ய அருட்சட்டம் வகுத்து வழங்கிய அருட்குருநாதர் ஸ்ரீ. இரெட்டியப்பட்டி சுவாமிகள் தென்னாடு செய்த தவப்பயனால் விளாத்திகுளத்தை அடுத்த நாகலாபுரம் இரெட்டியப்பட்டியில் கி.பி. *1856* இல் திருவவதாரம் செய்து, கி.பி.*1923* இல் அருளடக்கம் ஆனார். அவர் அருளிய அருட்சட்டத்தைக் கடைப்பிடிக்கும் அடியார்கள் உலகெங்கிலும் வாழ்கின்றனர்.

குருநாதர் திருப்பெயரால் ஏற்படுத்தப் பெற்று திருக்கோயில் நிர்வாகத்தை நடத்தி வரும் இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கத்தின் அங்கத்தினர்களில் ஒருவரான உயர்திரு. G. முத்துராம ரெட்டியார் அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழாவில் இந்நூல் வெளியிடப்பெறுகின்றது.

அருட்சட்ட வளர்ச்சிக்கு வித்திட்ட ஆன்றோர்களின் அரும்பணிகளை விவரிக்கும் இந்நூல் அடியார் பெருமக்களுக்கு உறுதுணையாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

இந்நூல் உருவாகவும், அச்சாகி வெளிவரவும் முக்கிய காரணமாயிருந்த மணிவிழாக் குழுவினருக்கு அடியார் உலகம் மிகவும் கடப்பாடுடையது.

மிகுந்த தொண்டுள்ளம் கொண்ட மணிவிழாத் தலைவர் உயர்திரு. G. முத்துராம் அவர்கள் பல்லாண்டு வாழ்ந்து சங்கத்திற்கும் அடியார்களுக்கும் பெருந்தொண்டு ஆற்ற சக்தி அளிக்கும்படி எல்லாம் வல்ல எந்தை குருநாதரை மனமார வேண்டுகிறேன்.

காஞ்சீபுரம்,
*7-8-93*

சு. மங்கையர்க்கரசி,
(தலைவர். இரெட்டியப்பட்டி
ஸ்வாமிகள் சங்கம்)

# உள்ளுரை

## அருட்சட்ட வளர்ச்சிக்கு வித்திட்ட ஆன்றோர்கள்.

# ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னையின் மகிமை



ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் 1856-ம் ஆண்டு வ.உ.சி. மாவட்டத்தை சேர்ந்த இரெட்டியப்பட்டி என்ற ஓர் சிற்றூரில் தோன்றினார். ஸ்ரீ பரிபூர்ணவிநாயகர் அருளால் குற்றாலம் பொதிகை மலையில் 12 ஆண்டுகள் கடும்தவம் ஆற்றி ஞானம் பெற்றார். தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற வாக்கிற்கிணங்க எல்லோரும் முக்தி பெற வேண்டும் என்று அவாக் கொண்டு ஸ்ரீ பரிபூர்ண விநாயகரிடம் வரம் வாங்கி "அருள்சட்டம்" என்ற ஒரு வழி ஏற்படுத்தி அதன்படி நடப்பவர்கள் இல்லறத்திலிருந்தே ஞானம் பெற முடியும் என்று உலகினிற்கு உணர்த்தினார்.

இப்படிப்பட்ட ஒரு புது வழியில் நடந்து ஞானம் பெறுவதற்கு தகுந்தவரை "காசிமுதல் கன்னியாகுமரிவரை" தேடியது என்று நம் குருநாதரே சொல்லியுள்ளார். அப்படி தேடிக் கண்டுபிடித்து அநுக்கிரகம் பெற்றவர் தான் ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னை அவர்கள். விஜயஆண்டு ஆவணித்திங்கள் மக நட்சத்திரத்தில் "சொர்ணம்" என்ற நாமத்துடன் ஜகத்தை ஆள தோன்றினார்கள் நம் அன்னை அவர்கள். விழுப்புரம் தாலுக்காவில் உள்ள எங்கள் ஊர் "பாக்கம்" கிராமம்தான்

ஸ்ரீலஸ்ரீ அன்னை அவர்கள் பிறந்த ஊர். அங்கேயே பள்ளியில் படித்து, சிறுவயதிலேயே நல்ல உபந்நியாசம் செய்யக்கூடிய அளவில் திறமை பெற்றிருந்தார்கள் நம் அன்னை அவர்கள்.

ஞானிகளின் நாட்டமாக வாழ்ந்து வந்த அன்னை அவர்கள், பாண்டிச்சேரி பிள்ளையார்குப்பத்தை சேர்ந்த திரு. பாபு ரெட்டியார் என்பவரை மணந்து அருள்வாழ்வு வாழத் தொடங்கினர்கள். தன் தமையனார் திருச்சாத்தனூர் முத்துராமரெட்டியார் (சாத்தனூர் ஸ்வாமிகள்) மூலமாக நம் இரெட்டியப்பட்டி ஸ்வாமிகளைப்பற்றி தெரிந்து கொண்டு அருள்சட்டம் ஏற்றார்கள். கடும் உபவாசம், நிஷ்டை மூலமாக பரிபூர்ணன் அருள்பெற்று "நிர்விகல்ப சமாதி" நிலையை அடைந்து ஞானம் பெற்றார்கள்.

வீட்டிலேயே இருந்து கொணடு இரவிலும், விடியற்காலையிலும் ஒருவருக்கும் தெரியாமல் கடும் தவம் ஆற்றிய நம் அருள் சக்தி அன்னையார் அவர்கள் பல அன்பர்களை தன் இல்லறத்திற்கு அடிக்கடி வரவழைத்து உணவுடன் அருளையும் கலந்து வழங்கி பக்குவப்படுத்திய பெருமை அநுபவித்தவர்களுக்கு மட்டுமே தெரியும். அப்படி அடிக்கடி சென்று அவர்களை தரிசனம் செய்யும் பாக்கியம் பெற்றவர்களில் அடியேனும் ஒருவன் என்பதை கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். ஒன்றும் தெரியாத என்னையும் அவர்கள் ஆட்கொண்டு என் குடும்பத்தில் ஏற்ப்பட்ட கஷ்டங்களை எல்லாம் நீக்கி எப்போதும் அவர் நினைவாக வாழ வழி வகுத்த பெருமை அவர்களையே சேரும்.

பல ஆண்டுகள், பல்லாயிரக்கணக்கான அடியார்களுக்கு அவர் எப்படி குறை தீர்த்து வைத்தார்கள் என்பது எனக்கு நன்றாக தெரியும். மனிதர்களுக்கு எவ்வளவோ குறைகள், கல்யாணம் பண்ண வேண்டும், வீடுகட்டவேண்டும், பிள்ளைக்கு வேலை கிடைக்க வேண்டும், விதவிதமான நோய்கள் அவை குணமடையவதற்கு வழி வகுக்க வேண்டும், இன்னும் எவ்வளவோ குறைகள் அவர்களிடம் வந்து சொல்வார்கள். அவர்களிடம் மிக அன்பாக பழகி, அவர்களுக்கு தன்கையாலேயே உணவு பரிமாறி தைரியம் சொல்லி, பிரசாதங்கள் கொடுத்து வாசல்வரை வந்துநின்று வழி அனுப்புவார்கள். நெஞ்சமெல்லாம் நிறைந்து, மனம் மகிழ்ந்து, ஊர் திரும்பி செல்லும் அடியார்களை பார்க்கவே ஆனந்தமாக இருக்கும். ஊர் திரும்பும் அடியார்களை மறுபடியும் எப்போது பார்க்கலாம் என்று

அன்னையார் கேட்டு வாக்கு வாங்கி விடுவதால் அடிக்கடி வர வேண்டும் என்று அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஏற்படும்.

ஸ்ரீலஸ்ரீ அன்னைஅவர்கள் பூத உடல் மறைந்து *13* ஆண்டுகள் ஆகியும், இன்றும் அவருடைய சக்தி பன்மடங்காக உயர்ந்து அருள்பாவித்து கொண்டிருப்பதை ஒருமுறை பிள்ளையார் குப்பம் வந்து அன்னை ஆஸ்ரமத்தில் தரிசனம் செய்பவர்களுக்கு நன்கு புரியும். நம்மை நல்ல வழி நடத்திச் செல்ல, மனம் அமைதி பெற, நோய்கள் நீங்க, வினைகளைசுலபமாக அனுபவித்து முடிக்க, ஞானம்பெற மிகமிகச் சிறந்த இடம் இந்த அருள் சக்தி அன்னை ஆஸ்ரமம்.. எக்ஸ்ரே கருவி எப்படி படம் எடுக்கிறதோ அப்படி நம் உடல் மீது படும் "அருட்கதிர்வீச்சு" நாம் அறியாமலேயே நம்மை பக்குவபடுத்திவிடும் என்பது அடிக்கடி அங்கு வந்து தரிசனம் செய்யும் அன்பர்களுக்கு தெரியும்.

சுலபமான வழியில் ஒரு பைசா கூட செலவில்லாமல், ஒரு கஷ்டமும் இல்லாமல், யாருடைய உதவியும் இல்லாமல், நேரடியாக பூரண அருள் பெறுவதற்கு ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகளும், ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னை அவர்களும் எப்போதும் தயாராக இருக்கிறார்கள்.

ஆண்டவர் அருள்வாக்கின்படி "அடியார்கள் விஷயம் தாயிடமும் தாய் விஷயம் ஆண்டவரிடமும் இருக்கட்டும்" என்பதற்கிணங்க எல்லா அடியார்களும் ஸ்ரீ அருள்சக்தி அன்னையின் மூலமாக அருள் பெறுவது சுலபம் என்பது என் அபிப்ராயம். அம்பாள் அநுக்கிரகம் இல்லாமல் தவம் நிறைவு பெறாது என்பதால் அடியார்கள் எல்லோரும் அருள்சக்தி அன்னை ஆஸ்ரமத்திற்கு அடிக்கடி வந்து தரிசனம் செய்து அருளைப் பெறுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

பாக்கம், G. முத்துராம்.
*03-08-93.*

## திரு. நரசிம்மலுநாயுடு ஸ்வாமிகள்



ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகளிடம் நேரடியாக அனுக்கிரகம் பெற்றவர்களில் தவத்திரு. நாயுடு ஸ்வாமிகள் மிக முக்கயமானவர். ஆண்டவர் திருசாத்தனூரில் தங்கியிருக்கும் போது அருகாமையில் வசித்து வந்த அருள்நகர்வாசியான நம் நாயுடு ஸ்வாமிகள் அவண் அடிக்கடி சென்று தரிசனம் செய்து ஆசிபெற்றார். திரு. அருட்கொடி ஸ்வாமிகள் (ஸ்ரீலஸ்ரீ அருள் சக்தி அன்னையாரின் தமையனார் அவர்களின் மூலமாகத்தான் அருள்சக்தி அன்னையார் அருட்சட்டம் ஏற்றார்கள்) என்னும் சாத்தனூர் ஸ்வாமிகள் வீட்டில் நம் குருநாதர் பல நாட்கள் தங்கி, அங்குள்ள அடியார்களை ஒன்று திரட்டி பக்குவப்படுத்தியுள்ளார்கள். அப்படிப்பட்ட நேரத்தில் ஆண்டவர் அருளிய வாக்கு, அவரிடம் மக்களுக்கு இருந்த அடர்ந்த ஆழமான நம்பிக்கை பரிபூரண அன்பையெல்லாம் நன்கு அறிந்த நாயுடு ஸ்வாமிகள் பிற்காலத்தில் அதாவது 1936-ம் ஆண்டு கமிஷனர் திரு. கி. இராமலிங்கனார் இல்லத்தில் பல மாதங்கள் தங்கி பல விஷயங்களை சேகரித்து "வழிகாட்டும் வான்பொருள்" என்ற அருமையான ஆண்டவர் வரலாற்றுப் புத்தகம் படைக்க மிகவும் உதவியுள்ளார். ஒரு வக்கீல் குறுக்கு விசாரணை செய்வது போல அடியார்களை திருச்சாத்தனூருக்கு வரவழைத்து அவர்களிடம் ஆண்டவர் அருளிய வாசகங்களை கேட்டு அதை செம்மைப்படுத்தி நூல் வடிவிலே அதை உருவாக்கியவர் திரு. கமிஷனர் ஸ்வாமிகள். அதற்கு பக்கபலமாக அவருடன் சென்னையில் தங்கி திரு. நாயுடு ஸ்வாமிகள் பல மாதங்கள்

வெறும் பால் மட்டும் சாப்பிட்டு உபவாசம் இருந்து புத்தகம் வெளியிடுவதற்கு மிகவும் பாடுபட்டார்.

அதுமட்டுமல்லாமல் அநாதைக் குழந்தைகளை ஆதரித்து அவர்களுக்கு ஒரு விடுதி ஏற்படுத்தி பின்னால் ஒரு ஆரம்ப பள்ளியும் ஆரம்பித்து நடத்தி வந்தவர் திரு. நாயுடு ஸ்வாமிகள்.

இருவேலிப்பட்டி ரெட்டியார் (E.M. சுப்புராம ரெட்டியார்) அவர்களிடம் இனாமாக இரண்டரை ஏக்கர் நிலம் வாங்கி அதில் அநாதை குழந்தைகள் தங்குவதற்கு இடம் கட்டி பின்னால் பள்ளிக்கூடம் ஏற்படுத்தி "ஸ்ரீஇரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் சங்கம்" என்று ஒரு ஸ்தாபனத்தையும் ஏற்படுத்தியவர் திரு. நாயுடு ஸ்வாமிகள் தான்.

மேலும் அவர் பல அடியார்களை ஒன்று திரட்டி இரெட்டியப்பட்டி சென்று மார்கழி மாதத்தில் அனுஷ நட்சத்திரத்தில் நம் ஆண்டவருக்கு குருபூஜை விழா மிகச் சிறப்பாக பல ஆண்டுகள் நடத்தி வந்துள்ளார்கள்.

திருச்சாத்தனூரில் புரட்டாசி மாதம் இரேவதி நட்சத்திரத்தில் (1936-ம் ஆண்டு) ஆண்டவர் அருள் வாக்கில் "இங்கு கொடி நாட்ட வேண்டும்" என்று சொன்னதால், அருட்கொடி ஸ்தாபிதம் பண்ணவர் திரு. நாயுடு ஸ்வாமிகள் தான். "வழிகாட்டும் வான்பொருள்" புத்தகம் வெளியீட்டு விழாவும் திருச்சாத்தனூரில்தான் நடந்தது. இன்று அருள்நகரில் மேல்நிலைப் பள்ளிக் கூடமாக நடந்துவரும் ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் சங்க அருட்பள்ளியை திரு. நாயுடு ஸ்வாமிகளின் குமாரர் "திரு. ஞானகுரு" என்பவர் மிக நன்றாக நடத்தி கொண்டு வருகிறார். அவரும் அவர் தந்தையைப் போல் நல்ல மன உறுதி கொண்டவர். அவர் ஒருவரே தனியான பொறுப்பு ஏற்றுக் கொண்டு மிகத் திறமையாக நடத்தி வரும் அநாதை விடுதியும் அருட்பள்ளிக் கூடமும் பல்லாண்டு பல்லாண்டு நல்ல சிறப்பாக அமைய வேண்டும் என்றும் அருட்சட்டம் வளர்வதற்கு அவரும் நன்கு பாடுபடவேண்டும் என்றும், அவர் தந்தையார் ஆற்றிய அரும்பணியை அடியார்கள் மறக்காமல் அவருக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் எல்லா உதவிகளையும் செய்து கொடுக்க வேண்டும் என்றும் இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் அருட்சங்க செயலராக பணியாற்றி வரும் அடியோன் மிகத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். "அருட்சட்டம் வளர்வதற்கு வித்திட்ட ஆன்றோர்களில் முதன்மையானவராக கருதக் கூடியவர் திரு. நாயுடு ஸ்வாமிகள் என்று மீண்டும் கூறி என் கருத்தை நிறைவு செய்கிறேன்.

## ஸ்ரீ.கீ. இராமலிங்கனார் [ஆட்சிச் சொற்காவலர்]



வாழ்ந்தால் இப்படிப்பட்ட மனிதராகத்தான் வாழ வேண்டும்; பேசினால் இவர் பேசும் தமிழ் மொழி போல் பேச வேண்டும், தூய அன்பு என்று ஒன்று இருந்தால் இவரைப்பார்த்துதான் தெரிந்து கொள்ள வேண்டும், என்று ஒரு மாமனிதரைப்பற்றி எவ்வளவோ சொல்லலாம் என்றால் அதுதான் நம் கமிஷனர் ஸ்வாமிகள். கொஞ்சி குலாவிடும் பிஞ்சுக் குழந்தை போல் நெஞ்சமெல்லாம் நிறைந்திடும் அவருடைய செந்தமிழ் மணம் எங்கும் வீசும். தன் இல்லத்திற்கு "தமிழ் மணம்" என்ற பெயரை சூட்டிய நாயகர் திரு.கீ. இராமலிங்கனார். பல பட்டங்களை தன் பெயரோடு இணைத்து கொள்ளும்படி வாழ்ந்த வள்ளலார் அவர்.

ஸ்ரீஇரெட்டியப்பட்டி ஸ்வாமிகளுடைய மாபெரும் கருணையையும், திரு. ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னையாருடைய பரிபூர்ண ஆசியையும் பெற்ற அந்த மாமனிதர் ஒரு பெரிய அரும்பொக்கிஷத்தை அடியார்உலகிற்கு வழங்கியுள்ளார். "வழிகாட்டும் வான்பொருள்" என்ற "அருள் நூல்" நம் குருபெருமானின் வாழ்க்கை வரலாற்றை நாம் நேரிலே காண்பது போல, மிக மிக அருமையான முறையில் வடிவமைத்து கொடுத்த அந்த அறிஞருக்கு அருட்சட்ட அடியார்கள் என்றென்றும் கடமைப்பட்டவர் ஆவார்கள்.

பல நாட்கள், தன்னுடைய அலுவலக வேலைகளின் கூடவே இந்த நூல் தயாரிப்பதிலும் ஈடுபாடு கொண்டு, இரவு பகலாக எல்லா விஷயங்களையும் சேகரித்து, அதை அழகாக செம்மைப்படுத்தி, அதற்கு உதவியாக நம் நாயுடு ஸ்வாமிகளைத் தன் வீட்டிலேயே தங்க வைத்துக் கொண்டு, நூல்வடிவமைத்து கொடுத்தவர் திரு. கமிஷனர் ஸ்வாமிகள். அவர் பிள்ளையார்குப்பம் வரும்போது, நம் **ஸ்ரீலஸ்ரீ** அருள்சக்தி அன்னையார் அவர்கள், அவரை வரவேற்கும்போது ஏற்படுகின்ற அந்த அன்பும், ஆனந்தமும், நேரில் பார்த்தவர்களுக்குத் தான் புரியும். அப்படித் தாயின் அன்பிற்கு பாத்திரமான சேயாக விளங்கிய அந்த அற்புத மனிதரை மறக்கவே முடியாது. அவருடைய வாழ்க்கை வரலாற்றையே நூலாக வெளியிடும் அளவிற்கு மிக உயர்ந்த வாழ்க்கையை அமைத்துக்கொண்ட மாமனிதர் அவர்.

"தோன்றிர் புகழோடு தோன்றுக அஃதிலார்
தோன்றலில் தோன்றாமை நன்று"

என்ற வள்ளுவர் வாக்கின்படி வாழ்ந்து காட்டியவர் நம் கமிஷனர் ஸ்வாமிகள்.

நல்ல காந்தசக்தியான பார்வை, எப்போதும் சிரித்த முகம், பளிச்சென்ற பல் வரிசைகள், சுத்தமான, தூய்மையான ஆடைகள், எல்லாம் நேரப்படி ஒழுங்காக நடைபெறவேண்டுமென்று விரும்புபவர், எந்த வசதியையும் எதிர்பார்க்காதவர், மிகவும் அன்பானவர், ஒருவரைப்பற்றியும் புறம்பேசாதவர், பல நூல்களை நன்கு கற்று ஆராய்ந்து நிறைகுடமாக விளங்கியவர். பல திருமணங்களை முன்னின்று, தமிழ் மந்திரங்களை ஒரு புரோகிதர் போல் ஓதி (அதற்கு அழகான விளக்கத்தையும் கூறி) நடத்திக் கொடுத்தவர். நீண்ட நாட்களுக்கு (85 வயது வரை) நோயற்றவாழ்க்கை வாழ்ந்தவர். தன்னிடம் வருபவர்களுக்கு தேவையான உதவிகளை மனமார செய்து கொடுத்து வாழ்ந்தவர். உலக விஷயங்கள், ஆன்மீக விஷயங்கள், ஆகம சாஸ்திரத்தை பற்றிய விஷயங்கள், மற்றும் சரித்திர காலத்தில் நடந்தவைகள் என்று எந்த விஷயத்தைப் பற்றி கேட்டாலும் நல்ல விளக்கம் அளிப்பார்கள். "தமிழ் மொழி" மீது மிக்க பற்றுதல் கொண்டு ஒவ்வொரு ஆங்கில வார்த்தைக்கும் சரியாக தமிழ் மொழி பெயர்ப்பு செய்வதில் வல்லவர். (அரசாங்கமே அவரை கௌரவித்து, "செந்தமிழ் விளக்க வள்ளலார்", "ஆட்சிச் சொற்காவலர்" மற்றும் பல

பட்டங்களை வழங்கியுள்ளது) அப்படிப்பட்ட அந்த மாமனிதரை நாம் என்றும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

அவருடைய திருவுருவவப் படத்தை மிகப்பெரிய அளவில் தயார் செய்து நம் "அருட்சங்க கட்டிடத்தில்"அமைக்க வேண்டும் என்ற என் நீண்ட நாளைய ஆசையை "அடியார் உலகம்" நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அவருடைய முத்துவிழா (80-வயது பூர்த்தி) கும்ப கோணத்தில் திரு.P.R.வரதராஜுலு ஸ்வாமிகள் இல்லத்தில் நடைபெற்றது. அப்போது திரு.P.R.V. ஸ்வாமிகள் எல்லா அடியார்களையும் வரவேற்று உபசரித்தது கண்டு மிக ஆனந்தம் கொண்டார் கமிஷனர் ஸ்வாமிகள். இப்போது லட்சார்ச்சனை விழா திரு.P.R.V. ஸ்வாமிகள் வீட்டில் மிக மிகச் சிறப்பாக நடைபெற திரு. அருள்சக்தி அன்னையாரும், திரு. கமிஷனர் ஸ்வாமிகளுந்தான் காரணம் என்று சொன்னால் அது மிகையாகாது.

திரு. கமிஷனர் ஸ்வாமிகளோடு இணைந்து செயல்பட எனக்கு வாய்ப்பளித்த அருட்சட்ட அடியார்களுக்கு என் பணிவன்பான வணக்கத்தை கூறி, இப்படிப்பட்ட ஆன்றோர், சான்றோர், வள்ளல் பெருமான், தமிழ் அறிஞர், நம் அருட்சட்ட வளர்ச்சிக்கு அஸ்திவாரமாக இருந்த வரலாற்றை மேலும் விரிவாக தெரிந்து கொள்ள ஏற்ப்பாடு செய்ய வேண்டுமென்று கூறி என் விளக்கத்தை முடிக்கிறேன்.

## ஸ்ரீபாலகவி ஸ்வாமிகள்



வாரி வாரி வழங்கிய பாரி வள்ளல் வரலாறு கேள்விப்பட்டு இருக்கிறோம். நம் அடியார் குழுவில் அப்படிப்பட்ட பாரி வள்ளலாக விளங்கியவர் மீ.கே. வெங்கட்ராமன் என்ற பாலகவி ஸ்வாமிகள். பரந்த மனப்பான்மை சொல்லுக்கே இலக்கணமாக திகழ்ந்தவர். என்றும் யாருக்கும் தீங்கு செய்ய மனதால் கூட நினைக்கக் கூடாது என்று சொல்லி அதன்படி வாழ்ந்து காட்டிய மாமேதை அவர்.

நம் குருநாதர் மீது அளவு கடந்த அன்பு கொண்ட அந்த அருட்கவி தன் குருவைப் பற்றி பேசும்போதே கண்கள் குளமாகிவிடும் என்பதை நேரில் கண்டவர்கள் நன்கு உணர்ந்திருப்பார்கள். பல ஆயிரக்கணக்கான மக்களை நல்வழிப்படுத்தி "அருட்சட்டம்" ஏற்று நடத்த வழி வகுத்த அந்த மகானை ஒரு முறை பார்த்த எவரும் மறக்கவே முடியாது. பாசம் மிகுந்த தாயைப் போலவும், கருணை மிகுந்த குருவைப் போலவும், பணிவுள்ள சீடனைப் போலவும், நம்மை ஆட்கொளும் தலைவனைப் போலவும், வழிகாட்டும் வள்ளலைப் போலவும், "தயாளம்" என்ற வார்த்தைக்கு இலக்கணமாகவும், பிறர் துன்பம் கண்டு மனம் நொந்து கொள்ளும் மாமனிதராகவும், இல்லையென்று சொல்லாத கர்ணனைப் போன்றும், இன்னும் என்னவெல்லாம் உலகத்தில் உண்டோ அவ்வளவு அற்புத ஆற்றலையும் தன்னுள்ளே வைத்து வாழ்ந்து வந்த மிக மிக உன்னதமான மனித தெய்வம்தான் நம் பாலகவி ஸ்வாமிகள்.

சுந்தரத் தெலுங்கினை தாய்மொழியாகக் கொண்ட மீ.கே.வெ. செட்டியார் திரு. பாலகவி, அருட்கவியாக இளம்வயதிலேயே இறைவனால் ஆக்கப்பெற்றார். அதுமுதல் தமிழில் கவிபாடும் திறம் பெற்று பல தெய்வங்களைப் பாடியவர் நடமாடும் தெய்வமாகிய நம் இரெட்டியப்பட்டி ஸ்வாமிகளைப் பற்றி மட்டுமே பாடுவதற்கு விருப்பம் கொண்டவர். மூவர் அர்ச்சனை கொத்து, "கருணை மிகு வள்ளல்" என்ற 4672 பாடல்கள் கொண்ட புராணம் மற்றும் பல ஆயிரக்கணக்கான அரிய நூல்களை நமக்கு வழங்கிய புலவர்தான் நம் பாலகவி ஸ்வாமிகள். ஒவ்வொரு பாடலுக்கும் அவர் சொல்கின்ற விளக்கங்கள் கேசட்டாக தயார் செய்துள்ளார் நம் காஞ்சித்தாய் அவர்கள்.

"பால கவிநாயகரை" தவத்திரு சாதுராம் ஸ்வாமிகள் பதம் பிரித்து, "பாலகவி நாயகர்" என்றும் அழகாககூறியுள்ளார். அப்படிப்பட்ட "விநாயகராக" வாழ்ந்த அந்த தவமுனி தன் சமாதிக் கோயிலில் "விநாயகரை" வைத்து வழிபாடு நடத்த வேண்டும் என்று கட்டளையிட்டதை ஏற்று தவத்திரு அருள் ஞானத்தாயாக விளங்கும் காஞ்சி மாநகர் தந்த சு. மங்கையர்க்கரசி தாய் அவர்கள் அழகாக கோயில் கட்டியுள்ளார்கள். நாற்பத்தைந்து நாட்களில் இரவு பகலாக திருப்பணி செய்து மண்டலாபிஷேகத்திற்குள் ஒரு அற்புதமான கோவிலாக உருவாக்கினார்கள் என்றால் அது பாலகவி ஸ்வாமிகளின் சக்தியாக எண்ண வேண்டுமே தவிர தன் முயச்சியால் நடந்தது என்று கொள்ளக் கூடாது என்று தவத்திரு காஞ்சித்தாய் அவர்களே கூறியுள்ளார்கள். அப்படிப்பட்ட அந்த அருட்கவி, திரு. பாலகவி ஸ்வாமிகள் புகழ் என்றென்றும் இந்த உலகம் உள்ள வரைக்கும் ஓங்கும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. அடியார் உலகம் அவருக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளது. அந்த மகானுக்கு வருங்காலத்தில் மிக மிக சிறப்பாக "குருபூஜை" நடத்தி அவருடைய விருப்பமான "அன்னதானம் அளித்தல்" என்பதை சிறப்பாக செய்து வரவேண்டும் என்பதே என் அவா. வெளியூர் ஜனங்கள் நம் ஆண்டவர் குருபூஜைக்கு வரும் காலத்தில், சாப்பிடாமல் போகக்கூடாதே என்பதற்காக, பெரிய பெரிய அண்டாக்களில் உணவு தயார் செய்து கட்டிடம் இல்லாவிட்டாலும் பரவாயில்லை தெருவிலே ஒரு கான்கிரீட் ஸ்லாப் போட்டு அதன்மேல் அமர்ந்து உணவு அருந்தட்டும் என்று எண்ணிச் செயல்பட்டவர். அவரோடு இணைந்து செயல்ப்பட்ட நாட்களை மிக அற்புத நாட்களாக எண்ணி, அவர் வழி எனக்கு ஒரு நல்ல பாடமாக இருப்பதாக நினைத்துகொண்டு அவருடைய ஆசி எப்போதும் கிடைக்கும் என்ற பூரணமான எண்ணத்துடன், என்னுடைய 60வயது பூர்த்தி நாளாகிய இன்று அவரை சிரம் தாழ்த்தி வணங்கி என் விளக்கத்தை நிறைவு செய்கிறேன்.

## தவத்திரு ஆதிதாசன்

(திரு. ஆதிவீரராகவலுநாயுடு ஸ்வாமிகள்).



நம் குருபெருமானின் அருள்வாக்கின்படி எதற்கும் 'தனிமனிதரை நாடாமை', ஆண்டவரே கதி என்ற வழியிலே உறுதியாக நம்பிக்கை கொண்டு யாருக்கும் எதற்கும் பயப்படாமல் துணிச்சலாக, நோய்வந்தபோதும் சட்டநெறி தவறாமல் வாழ்ந்து காட்டிய மாமனிதர்தான் நம் ஆதிதாசன் ஸ்வாமிகள். எந்த விஷயத்தையும் சுருக்கமாக சொல்லி விளக்கம் அளிப்பது தான் அவருடைய தனிச்சிறப்பு. அவர் நிஷ்டையில் இருக்கும் போது பார்ப்பதற்கு வாய்ப்பு கிடைத்த அடியார்களுக்கு தெரியும், அவர் ஒரு சிலை போன்று இருப்பார். ஒரு சிறு அங்க அசைவு கூட இருக்காது. கடும்தவம் ஆற்றும் யோகி போல் அமர்ந்திருப்பார். குற்றாலத்தில் நம் குருநாதர் தவம் ஆற்றிய குகைக்குச் சென்று (பொதிகைமலை சண்பகமாதேவி அருகில் உள்ளது நம் ஆண்டவர் தவம் செய்த குகை) பல மணி நேரம் அசையாமல் கடுந்தவம் ஆற்றுவாராம். சட்டத்தில் இருப்பவர்கள் எதற்கும் அஞ்சவேண்டாம். உறுதியாக இருந்தால் உடையவன் கருணை கட்டாயம் கிடைக்கும் என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டவர். பில்லி, சூனியம் மற்றும் பல விதத்திலும் துன்பம் கொண்ட அடியார்கள் அவரிடம் வந்து வீபூதி பிரசாதம் பெற்று குணமடைந்தது பலருக்குத் தெரிந்திருக்கும். பாண்டிச்சேரியில் திரு. சாமிப்பிள்ளை என்பவர் வீட்டில் பில்லி, சூனியம் கடுமையாக இருந்ததை நம் ஆண்டவர் அருளால் நீக்கினார்.

அவருடைய குமாரர்கள் பலரும் நம் ஆண்டவர் அருட்சட்டத்தில் தீவிரமாகப் பங்கு கொள்ள வழிவகுத்தார். பாரீஸ் நகரில் வசித்து வரும் அவர் மகன் பெத்தி என்பவர் இரெட்டியப்பட்டியில் அருட்கொடிக்கம்பம் மற்றும் உற்சவ மண்டபம் வேலைகளை செய்வதற்கு பொருள் உதவி செய்தவர். மிகுந்த குளிர் பிரதேசமான பாரீஸ் நகரில் இன்றும் அருட்சட்டத்தை ஏற்று நெறி தவறாமல் வாழ்ந்து வருகிறார். அப்படிப் பல குடும்பங்கள் அருள்சட்ட வழி நடப்பதற்கு வழி வகுத்தவர் திரு. ஆதிதாசன் என்று சொன்னால் அது மிகையாகாது. அவருடைய அங்க லட்சணங்கள் நம் குருநாதர் போன்றே அமைந்தது மிகச் சிறப்பு. 75 வயது வரை நல்ல திடகாத்திரமான சரீரத்தோடு வாழ்ந்த அந்த மாமனிதரோடு மிக நெருங்கிய தொடர்பு கொண்டு நான் வாழ்ந்ததால், இன்றும் அவர்கள் குடும்பத்தில் எல்லோருடனும் எனக்கு நெருங்கியத் தொடர்பு உண்டு.

அவருடைய அருமை குமாரர் திரு. பாலகுரு அவர்கள் இன்றும் சுவாமிகள் சங்கத்தில் இணைச்செயலாளராக பதவி ஏற்றுக்கொண்டு பல அரிய செயல்களை செய்து வருகிறார். பாண்டிச்சேரியில் உள்ள அடியார்கள் பலரும் திரு. ஆதிதாசன் ஸ்வாமிகளை அடிக்கடி சந்தித்து பல விளக்கங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டதாக சொல்வதிலிருந்தே அந்த தவமுனியின் சேவை எப்படி அருட்சட்ட வளர்ச்சிக்கு வித்திட்டது என்பதை புரிந்து கொள்ளலாம். "இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள்" சங்கத் தலைவராக இருந்து வந்த அந்த ஞானியின் பொற்பாதங்களை இந்த 61வது பிறந்தநாளில் வணங்கி என் விளக்கத்தை முடித்துக் கொள்கிறேன்.

## தவத்திரு G. சரவணப்பிள்ளை அவர்கள்

(திரு. விசலூர் சுவாமிகள்)



மதுரை வீரன் குதிரையின் மேல் அமர்ந்து, ஒரு ராஜகுமாரனைப் போல் உள்ள புகைப்படம் ஒன்று இரெட்டியபட்டியில் திரு. சரவணப்பிள்ளை அவர்கள் சத்திரத்தில் உள்ளது. அதைப் பார்த்து இப்படி அட்டகாசமாக இளம் வயதில் உள்ளவரா, இப்படி நல்ல மாமுனிவர் போல் முகம் பழுத்து. தலை நிறைத்து, உடல் இளைத்து, புன்னகை தவழும். பார்வையுடன் அடியார்களை அன்பினால் ஆட்கொண்டவராக இருக்கிறார் என்று எண்ணும்போது வியப்பாக இருக்கும். கும்பகோணத்தில் கடுமையாக நாத்திகம் பரவி இருந்த சமயம் இவர் ஆத்திகராக மாறி தன் குடும்பத்தில் உள்ள பெண்கள் எல்லோரும் சட்ட வழி நடக்க வழி வகுத்தார். அருட்சட்ட நெறியில் யார் எந்த தப்பு செய்தாலும் "அடிதான்" என்று வாய்க்குவாய் சொல்லும் இந்த மாமனிதர் பின் குற்றம் பார்க்காதே, தன் குற்றம் தானுணர வேண்டும் என்பதில் மிகவும் அக்கறை கொண்டவர். ஆண்டவர் அருட்பாடல் பாடினால் மனம் நெகிழ்ந்து போவார். இரெட்டியப்பட்டியில் விழாக்காலத்தில், தன் ஊரிலிருந்து அரிசி, வாழைஇலை மற்றும் காய்கறிகள் வண்டி வண்டியாக கொண்டு வந்து கொடுப்பார். விழாக்காலங்களில் பல இனிப்பு பலகாரத்தோடு உணவு வழங்க வேண்டுமென்பதில் மிகவும் அக்கறை கொண்டவர். குற்றம் இல்லாமல் ஆண்டவர் தண்டனை கொடுக்கமாட்டார், ஏதாவது குற்றம் இருக்கும், ஆண்டவரிடம் மன்னிப்பு கேளுங்கள் சரியாகிவிடும் என்பதுதான் இவருடைய அருள்வாக்கு. கேணியில்

(கிணற்றில்) இருந்து நேராக தண்ணீர் வந்து அதில் விடியல் 4 மணிக்கு ஸ்நானம் செய்வதே இவருக்கு விருப்பம். பழைய டேங்க் தண்ணிரில் குளித்தால் பலன் இல்லை என்று பலருக்கும் எடுத்துச் சொல்வார். நிறைந்த செல்வம் படைத்த இந்த வள்ளல் பலருக்கு பல உதவிகளை கேட்காமலேயே செய்து கொடுத்து இன்புறுவார். இவர் சங்கத்தில் உதவி தலைவராக இருந்த காலத்தில் இவருடன் ஒத்துழைக்கும் வாய்ப்பு அடியேனுக்கு கிடைத்ததை பாக்கியமாக கருதுகிறேன். ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னையிடம் அளவிலா அன்பு கொண்டவர். தன் இல்லத்திற்கு அவரை அழைத்து பாதபூஜை செய்தவர். ஏழு பெண்களும் ஒரு மகனையும் ஈன்ற இந்த வள்ளல் பெருமான் ஒரு பெரிய சத்திரத்தை இரெட்டியப்பட்டியில் கட்டி அதற்கு ஒரு டிரஸ்ட் ஏற்படுத்தி, அடியவர்கள் தங்குவதற்கு நல்ல வசதி செய்து கொடுத்துள்ளார். அருட்சட்ட வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டு வரும் இந்த குடும்பத்தில் இன்றும் எல்லோரும் (அவர்கள் வீட்டு மாப்பிள்ளைகள் பேரக்குழந்தைகள் உள்பட) அருட்சட்டத்தில் இருந்து வருகிறார்கள். அவருடைய மகன் திரு. கோவிந்தராஜன் அவர்களும், பேரன் திரு. பாலகுரு அவர்களும் இன்றும் அடியார்களுக்கு ஆற்றிவரும் தொண்டு மகத்தானது. அருள் & கோ என்ற தன் ஸ்தாபனத்தின் மூலமாக தவணை முறையில் எல்லோருக்கும் பொருட்களை வழங்கி இன்று "கும்பகோணத்திலேயே" மிகப் பிரபல்யமாகவாழ்ந்து வரும் அந்த குடும்பத்தாருடன் எப்போதும் எனக்கு மிகுந்த தொடர்பு உண்டு என்று மிக்க மகிழ்ச்சியோடு கூறி என் விளக்கத்தை முடிக்கிறேன்.

## அருள் வேந்தர் ஸ்ரீ மாம்பலம் சுவாமிகள்

## அருள் அரசி ஸ்ரீலஸ்ரீ மாம்பலம் தாய் அவர்கள்



நம் கண்களுக்கு தெரியாமல் உள்ள மின்சக்தி எப்படி எல்லாவித இயக்கங்களையும் செய்ய வல்லதோ [இன்று மின் சக்தியால் ஆகாத காரியமே இல்லை எனலாம், அப்படி தினசரி வாழ்க்கையில் ஒவ்வொரு செயலையும் மின்சக்தி கொண்டே நடத்திவருகிறோம்] அப்படிப்பட்ட அபூர்வ சக்தி கொண்ட தம்பதிகள்தான் நம் மாம்பலம் ஸ்வாமிகளும், மாம்பலம் தாய் அவர்களும் என்று சொன்னால் அது மிகையாகாது. எப்படி மின்சாரம் தொட்டால் ஷாக் அடிக்கும் என்று பயப்படுகிறோமோ அப்படி மாம்பலம் ஸ்வாமிகளிடம் அருகில் நின்று பேசக்கூட அடியார்கள் பயப்படும் அளவிற்கு அவரிடம் ஒரு தனி சக்தி இருந்தது. அந்த சக்தி நம் அருள் சக்தி அன்னை அவர்களின் ஆசியால் ஏற்ப்பட்டது என்று அவரே கூறியுள்ளார். என்னிடம் எந்த சக்தியும் கிடையாது. ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு செயலை செய்யும் போதும் நான் நம் குருநாதரிடம் தாக்கல் செய்து விட்டுதான் தொடங்குவேன். ஏதேனும் தடை வந்தால் உடனே அதற்கு காரணம் அறிந்து கொண்டு மாற்றி செய்ய முற்படுவேன். அதுதான் நம் ஸ்வாமிகளின் அபூர்வமான வழி, தடுத்து ஆட்கொள்ளும் வழி, அதை ஒவ்வொரு அடியாரும் அநுபவித்து தெரிந்து கொள்ள வேண்டும் என்று மாம்பலம் ஸ்வாமிகள் கூறுவார்கள்.

ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னையிடம் தன்னைப் பூரணமாக அர்ப்பணித்துக் கொண்டவர் மாம்பலம் ஸ்வாமிகள். அவர்களின் ஆசியால் பட்டை தீட்டப்பட்ட வைரமாக ஜொலித்து வாழ்ந்து வந்தவர் இந்த தவசக்தி கொண்ட தம்பதிகள். இந்த இருவருமே இரண்டு மாறுபட்ட குணத்தைக் கொண்டிருந்தாலும் மின்சக்தியில் ஒன்று பாசிட்டிவ் (+) மற்றொன்று நெகட்டிவ் (-) என்று இருப்பது போல இணைந்து வாழ்ந்து வந்தார்கள். மின்காந்தத்திலும் அப்படித்தான், மாறுபட்ட போல்தான் ஈர்க்கும் சக்தி உடையது (Like poles repel and unlike poles attract) என்பது போல இருவரும் மிகமிக அன்யோன்யமாக வாழ்ந்த வரலாறு பார்த்தவர்களுக்குத்தான் தெரியும்.

பல ஆண்டுகள் அவர்களிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்பு பெற்றதால் அவர்களுடைய மாறுபட்ட குணங்களை ஒரு சிறு அட்டவணையில் விளக்குவது சுலபம் என நினைக்கிறேன்.

| ஸ்ரீ மாம்பலம் ஸ்வாமிகள் | ஸ்ரீ மாம்பலம் தாய் அவர்கள் |
|---|---|
| 1. சுவாமிகள் கடுமையானவர். | தாய் மிகவும் சாந்தமானவர். |
| 2. சுவாமிகள் தைரியமானவர். | தாய் மிகவும் பயந்த சுபாவம் கொண்டவர். |
| 3. சுவாமிகள் தீர்க்கமான முடிவு எடுப்பவர். | தாய் மிகவும் சந்தேகம் கொண்டவர். |
| 4. அன்பு காட்டுவதிலும் தனிவழி இவருக்கு | அன்பினால் மனம் நெகிழும்படி நடந்து கொள்பவர். |
| 5. எந்த நோயும் இவரிடம் நெருங்காது தன் சொல்படி உடல் கேட்க வேண்டும் என்பதில் கண்டிப்பானவர். | நோயை தாங்கியே பழக்கமானவர் அதைகூட எதிர்த்து போராட நினையாதவர். |

மாம்பலம் சுவாமிகளிடம் எந்த விஷயத்தைப் பற்றி பேசினாலும் அதற்கு பல உதாரணங்களை மேற்கோள் காட்டி, மனதில் நன்றாக பதியும்படி அழுத்தம் திருத்தமாக சொல்வதால், என் வாழ்க்கையில் பலமாறுதல்களை ஏற்படுத்தியுள்ளார்கள். இன்றும் என்காதில் அவர்

குரல் ஒலிப்பது போலவே இருக்கிறது, அவருடைய அறிவுரைகளை ஒருநாளும் மறக்க முடியாது. ஒருமுறை அவரிடம் ஏன் சாமி, எனக்கு உபவாசம், மௌனம், தவம் மற்றவை வரவில்லையே, என்ன காரணம் என்று கேட்டதற்கு அவர் கூறினார், "நம் ஆண்டவர் வழியே தனிவழி, அடியார்களை தேற்றுவதில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வழி", அதில் தங்களுக்கு, தொண்டு செய்யும் பணியை ஒப்படைத்து உள்ளார்கள். எனவே ஒதுங்கி நின்றால் முன்னேற முடியாது. பொருப்பேற்று உழைத்து உடையவனிடம் தாக்கல் செய்து விளக்கம் பெற்றுச் செய்தால் எந்த பணியும் சிறந்த முறையில் ஆற்ற முடியும். அதுவே மோட்சத்திற்கு வழிவகுக்கும்". நாடுவோர்க்கெல்லாம் நாடியபடியே நல்வரம் கொடுக்கும் நல் ஈசன் என்ற நம் குருநாதரின் அருள் வாக்கிற்கிணங்க அவரவர்களுக்கு எதில் விருப்பமோ அதை செய்யலாம். அதாவது [பாடல் எழுதுவது, கட்டிடம் கட்டுவது, சாப்பாடு போடுவது, விழா நடத்துவது, உபந்நியாசம் பஜனை செய்வது இப்படி உடையவனிடம் உறுதி கொண்டு எந்த வேலை செய்தாலும் பரவாயில்லை, அதற்கு தகுந்த பலன் உண்டு என்பது நம் சுவாமிகள் வாக்கு] என்று சொல்வார்வார்கள்.

மாம்பலம் சுவாமிகள் நேர்மையானவர், நாணயமானவர், கடுமையாக உழைப்பவர், கடமை தவறாதவர், தைரியமாகவும், துணிச்சலாகவும் எந்த காரியத்தையும் திட்டம் போட்டு நடத்தி காட்டுவதில் வல்லவர். நேரம் தவறாதவர். சொன்ன சொல் தவறாமல் நடந்து மற்றவர்களும் அப்படி நடக்க வேண்டுமென்பதில் கண்டிப்பானவர். சட்டவழியில் நூற்றுக்கு நூறு அப்படியே கடைபிடிக்க வேண்டும் என்று சொல்லி அதன்படி காலையிலும் மாலையிலும் சரியாக 4.00 மணிக்கு ஸ்நானம் செய்வதில் ஒரு நாள் கூட தவறாமல் நடந்து காட்டியவர். சொல்வது சுலபம் செய்வது கடினம் என்று அடிக்கடி சொல்லி தன்னிடம் வரும் அடியார்களுக்கு நல்ல பயிற்சி அளித்தவர். மகான்கள் பெருமையும் சக்தியும் விளக்கும்போது கடவுளைவிட ஒருபடி மேலானவர்கள் மகான்கள், அவர்களால் எதையும் செய்ய முடியும் என்று சொல்லுவார். எல்லா மகான்களையும் விட "ஸ்ரீ ரெட்டியப் பட்டி ஸ்வாமிகள்" எப்படி மிகச் சிறந்தவர் என்பதை விளக்கும் போது ஒரு மகான்கூட மற்றவர்கள் மோட்சத்தை அடைய வழி வகுத்தது கிடையாது, இல்லறத்திலிருந்தே ஞானம் பெற கட்டாயம் முடியாது, என்பதை மாற்றி எல்லா வேலைகளையும் செய்து கொண்டே ஞானத்தை அடையலாம் அதற்கு ஒரு உதாரணம் நம் அருள் சக்தி அன்னையார்

என்று சொன்னார். ஒரு பெண் ஜென்மா, அதுவும் பெரிய குடும்பத்தில் இருந்து கொண்டு எல்லோரையும் சமாளித்துக் கொண்டே கடும் உபவாசம் பல மாதங்கள், வருடங்கள் இருந்து, வீட்டிலேயே "நிர்விகல்ப சமாதி" பெற்று பூரண நிலையை அடைந்தார்கள் என்றால் ஸ்ரீ இரெட்டியபட்டி ஸ்வாமிகளுடைய வழி எப்படிப்பட்ட வழி என்று புரிந்து கொள்ளலாம் என்று சொல்வார்.

அடியார்களுக்கு எல்லா வசதிகளையும் செய்து கொடுக்க வேண்டுமென்பது அவருடைய அவா. அதற்காக பிள்ளையார் குப்பத்திலும் இரெட்டியப்பட்டியிலும் பல கட்டிடங்கள் கட்டி, தண்ணீர் வசதி, பாத்ரூம் வசதி, தங்கும் வசதி, மற்ற எல்லாவசதிகளையும் [சாப்பாடுமுதல் படுப்பதற்கு பாய், தலையணை கொடுப்பது வரை சகல வசதியும்] ஏற்ப்படுத்தியுள்ளார்கள்.

பின்ளையார் குப்பத்தில் " வினை தீர்க்கும் விடுதி" என்று ஒரு கட்டிடம் கட்டி அதை நிர்வகிப்பதற்கும், அருள் சக்தி அன்னை ஆஸ்ரமம் நிர்வகிப்பதற்கும் தனியாக அறக்கட்டளை ஏற்ப்படுத்தி தன் குமாரர்களை டிரஸ்டியாக நியமித்து தொடர்ந்து நன்றாக நடைபெற வேண்டுமென்று கட்டளையிட்டுள்ளார்கள். ஆறு மகன்களும், இரண்டு மகளையும் ஈன்ற அந்த மாமனிதர் தன் குடும்பத்தார் அனைவரும் அருட்சட்ட வழியில் தீவிரமாக நடக்க வழிவகுத்தார்.

இரெட்டியப்பட்டியிலும் அடியார்கள் தங்கும் விடுதியும் சுமார் *30* பாத்ரூம், கழிவறை வசதியும் ஏற்படுத்தி அதை நிர்வாகம் செய்ய அறக் கட்டளையும் ஏற்படுத்தியுள்ளார். "குருபாதம் துணை" , " குருபாதம் துணை" என்று அடிக்கடி சொல்லும் அவர் தன் இல்லத்திற்கும், சத்திரத்திற்கும் குருபாத நிலையம் என்றே பெயர் சூட்டினார்.

அருட் சக்தி அன்னையார் கட்டளைப்படி பிள்ளையார்குப்பத்தில் *1980* முதல் *1984* வரை தங்கி தானே உணவு தயாரித்து உண்டு வேலைசெய்யும் ஆட்களுக்கும் கொடுத்து திருக்கோயில் திருப்பணி செய்தவர் ஸ்ரீ மாம்பலம் ஸ்வாமிகள். ஆயிரம் ஆண்டு உத்திரவாதம் என்று திரு கணபதி ஸ்தபதியார் அவர்கள் சொல்கின்ற அளவிற்கு கருங்கல் திருப்பணி செய்தது இன்றும் பலருக்கு ஆச்சரியம் அளிக்கிறது. அற்புதமான வேலைப்பாடுகொண்ட அந்த அருள்சக்தி அன்னை ஆஸ்ரமத்தை இரவு பகலாக உழைத்து கட்டிமுடித்து *8-6-1984*-ல் கும்பாபிஷேகம் செய்தது உங்களுக்கு தெரிந்திருக்கும்.

இரண்டாம் முறையாக 1988-ல் இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் திருக்கோயில் கும்பாபிஷேகம் செய்ய வழிவகுத்தவரும் இவரே. (முதல் கும்பாபிஷேகம் 14-9-1972-ல் நடத்தி முடித்தார்) இப்படி தன் வாழ்நாளில் 3 கும்பாபிஷேகங்களை நல்ல முறையில் செய்து முடித்த மாம்பலம் ஸ்வாமிகளுக்கு "திருப்பணித் திலகம்" என்ற பட்டத்தை தவத்திரு பாலகவி ஸ்வாமிகள் வழங்கி கௌரவித்தார். அவர் கடைசியாக தவம் இருந்த காலத்தில் இரெட்டியப்பட்டியில் சித்தி விநாயகர் ஆலயம் கும்பாபிஷேகமும் நடைபெற ஏற்பாடு செய்துவிட்டு 30 நாட்களுக்குள் இறைவனோடு ஐக்கியமானார்.

ஸ்ரீலஸ்ரீ மாம்பலம் தாய் அவர்கள் நம் அருள் சக்தி அன்னையாரைப் போன்றே அடியார்களிடம் மிகுந்த அன்பும் பாசமும் கொண்டவர். அவர் சாப்பாடு பரிமாறும்போது யார்யாருக்கு எது பிடிக்கும் என்று அறிந்து அதன்படி அன்போடு பறிமாறும்போது நம்மை அறியாமலேயே அதிகமாக சாப்பிட்டுவிட்டு அடுத்த வேளைக்கு உணவே தேவையிருக்காதபடி ஆகிவிடும். அவருடைய அன்பிற்கு எல்லையே இல்லை என்பதை அவருடன் பழகியவர்களுக்கு நன்குதெரியும். எல்லோரையும் தன் குழந்தையாக எண்ணிக் கொண்டு அருள் பாலிக்கும் அருள்சக்தி அன்னையைப் போன்றே நம் மாம்பலம் தாய் அவர்களும் எல்லோரையும் சமமாக பாவித்து நடந்து கொண்டவிதத்தை என்னால் மறக்கவே முடியாது.

ஆண்டவன் அருட் சட்ட வழியில் நடப்பதற்கு ஆண்டவர் சொன்னதை மட்டுமே செய்ய வேண்டும் என்பதில் மாம்பலம் சுவாமிகள் கண்டிப்பாக இருந்தார்கள். யாராவது எதையாவது அவர்கள் இஷ்டப்படி சொல்லிவிட்டு பின்னால் அதனால் வரும் விளைவுகள் சட்ட வளர்ச்சியையே பாதிக்கும் என்பதாலும் எந்த அடியாரும் அவர்கள் இஷ்டத்திற்கு "சட்ட வழியை" தவறாக சொல்லக்கூடாது என்பதும் அவர் கருத்து. சட்டத்தில் புதிதாக சேர்ந்துள்ள அடியார்களுக்கு தைரியமும், விளக்கமும் சொல்ல வேண்டியது மற்ற அடியார்கள் பொறுப்பு என்றும், குருவை பிசகாசிக்கச் செய்வதே சிஷ்யனின் முதல் கடமை என்றும், மாம்பலம் ஸ்வாமிகள் சொல்வார்கள். அருமையான வழி நம் ஆண்டவர் வழி என்றும், நெறிதவறாமல் வாழ்ந்தால் நோய் வராது என்றும், கடும் உபவாசத்தினால் தவம் கூடும் என்றும், இல்லற வாழ்க்கையை வைத்துக் கொண்டே சதாசர்வகாலமும் மனம் மட்டும் ஆண்டவரிடம் செலுத்தி ஞானம் அடைய முடியும் என்றும், உலகப் பற்றைக்

கொஞ்சங்கொஞ்சமாக விட்டு, பின்பு வினையை முழுமையாக அனுபவித்து முடித்து விட்டால். மோட்சம் அடைவது நிச்சயம் என்பதும் அவர் கருத்து. தொண்டர் பணி ஒன்று தான் எல்லாவற்றிற்கும் வழிவகுக்கும் என்ற அவருடைய கருத்தை அடியேன் பூரணமாக ஏற்று எந்த விழாவிற்கு சென்றாலும் அதையே என்றுடைய லட்சியமாக ஏற்று நடந்து வருகிறேன். இதுவே நான் அவருக்கு காட்டும் நன்றியாக அமையும் என்று எண்ணுகிறேன். தீபாராதனை பார்ப்பது, அபிஷேகம் பார்ப்பது, மற்றும் கோவிலிலேயே இருப்பது மட்டும் தான் பக்தி என்பதில்லை, அதைவிட சிறந்த பலன் கொடுக்கக்கூடியது அடியார்கள் சேவை என்பதை நன்றாக எனக்கு உணர்த்தியவர் நம் மாம்பலம் ஸ்வாமிகள் என்று கூறி என் விளக்கத்தை முடித்துக் கொள்கிறேன்.

# திரு வைத்தியநாத ஸ்வாமிகள்



மாலைக் கதிரவன் மறைகின்ற நேரத்திலே செவ்வானத்தைக் கண்டு வியக்கும் சிறுவனைப் போல, நல்ல மாம்பழக் கனியின் சுவையை அதன் வாசனையைக் கொண்டு அறிவது போல, நல்ல நறுமணமான காபியை அருந்திய பின்பும் நாக்கில் சுவையிருப்பது போல, ஒரு முறை திரு. வைத்தியநாத ஸ்வாமிகளிடம் தொடர்பு கொண்டவர்கள் அவரை மறக்கவே முடியாது. சிவந்த உடலில் தங்கமயமான அங்கங்களைக் கொண்டு கருப்பு திராட்சை பாலில் மிதப்பது போன்ற தீட்சண்யமான கண்களுடன், நல்ல முத்துக்களை போன்ற வெண்பற்கள் புன்னகை வீசிட, ஆணழகனாக விளங்கிய நம் வைத்தியநாத ஸ்வாமிகள் ஆண்டவர் தொண்டு செய்ய அவாக் கொண்டு, தன் அன்னையின் நோய் தீர்க்க வந்த சமயம் தன் கணக்கை முடித்துக் கொண்டு, இறைவனோடு இரண்டறக் கலந்து விட்டார் என்ற செய்தி கேட்டு அதிர்ச்சி அடைந்த நாளை நான் மறக்கவே முடியாது.

இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் சங்க காரியதரிசியாக தன்னை நியமித்ததற்கு நன்றி காட்டும் வகையில் பல நல்ல காரியங்களை நடத்திக் காட்ட வேண்டுமென்று அவாக் கொண்டார். அற்புதமாக செயல்பட்டு மிக வேகமாக கும்பாபிஷேக வேலைகளை, அனைவரும்

வியக்கும் வண்ணம் நடத்தி முடித்த போதுதான் தன் தந்தையின் பாராட்டுதலை முதன்முதலாக நம் வைத்தியநாத ஸ்வாமிகள் பெற்றார். பல பொறுப்புக்களை அவரிடம் விட்டு விட வேண்டும் என்று மாம்பலம் ஸ்வாமிகள் எண்ணியபோது நம் குருநாதர் பல அருட்குறிப்புகளை நம் வைத்தியநாத ஸ்வாமிக்கு நிஷ்டையிலே நிகழ்த்திக் காட்டி பின்னால் என்னென்ன நடக்கும் என்று விளக்கியபோது அனைவரும் அளவிலா ஆனந்தம் அடைந்தார்கள். இரெட்டியப்பட்டியில் வாழும் மக்களுக்கு உதவ வேண்டும் என்று விரும்பினார். "வழிகாட்டும் வான் பொருள்" புத்தகத்தை புதிய முறையில் நன்றாக அச்சிட்டு வெளியிட்டார். ஆங்கிலத்தில் நம் ஆண்டவர் சரித்திரத்தை வெளியிட வேண்டும் என்று எண்ணம்கொண்டு, இரண்டு சிறந்த அறிஞர்களின் உதவியுடன் ஆங்கில புத்தகம் தயாரித்து வெளியிட ஏற்பாடு செய்யும் நேரத்தில்தான் அவருடைய முடிவு வந்தது.

மதுரைப் பரிபூர்ண விநாயகர் ஆலயம் சிறப்பாக அமையப் பாடுபட்டது தான் அவர் செய்த கடைசி பணி. பிள்ளையார்குப்பத்திலும் புதிய 'வினை தீர்க்கும் விடுதியைக்' கட்ட வழி வகுத்தார். நவராத்திரி விழா சிறப்பாக நடத்த ஏற்பாடு செய்தவரும் அவரே. சென்னையிலும் லட்சார்ச்சனை மிகச்சிறந்த அளவில் நடக்கவும் வழிவகுத்தார். அருள் சக்தி அன்னையின் ஆசியால் கடுந்தவம் ஏற்பட்டு திரு. மாம்பலம் ஸ்வாமிகளின் தவ வாழ்க்கைக்கு வழிகாட்டும் வகையில், பல நிகழ்ச்சிகளில் நடந்ததை எழுத்து மூலம் அவ்வப்போது அவர் தெரிவித்தார். பல அடியார்களை சந்தித்து சட்ட விளக்கங்களை ஒரு வழக்கறிஞர் போல விவாதித்து, தன்னுடன் பேசுபவர்கள் மனம் குளிரும்படி நடந்து கொள்வார். நம் வைத்தியநாத ஸ்வாமிகள். இன்னும் எவ்வளவோ வேலைகளைச் செய்யப் போகிறார் என்று எல்லோரும் எண்ணியிருக்கின்ற சமயத்தில் ஒரு பேய்க்காற்று வந்து விளக்கை அணைப்பது போல திடீரென்று ஒரே நாள் உடல் ந லமில்லாமல் படுத்து அன்று இரவே மறைந்து விட்டார். திரு. வைத்தியநாத ஸ்வாமிகளை என்றும் அடியார் உலகம் மறக்காது என்று சொல்லிக் கொண்டு அவருடன் கழித்த நாட்களை அற்புத நாட்களாக எண்ணிக் கொண்டு என் விளக்கத்தை முடிக்கிறேன்.

## உயர் தவத்திரு. பங்காரு ரெட்டியார் சுவாமிகள்

இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் ஆலயமணி அடித்துக் கொண்டும், கொட்டுமேளம், கொட்டுமேளம் என்று மங்களஆர்த்தி நேரத்தில் அடியார்கள் ஆங்காங்கே சொல்லிக் கொண்டிருந்தும், இரெட்டியப்பட்டி ஸ்வாமிகளுக்கு ஹரோஹரா என்று அடியார்கள் குரல்கள் ஒன்று சேர ஒலித்துக் கொண்டிருந்தும் அடாடா இன்று அலங்காரம் மிகப்பிரமாதமாக இருக்கிறதே என்று தாய்மார்கள் ஆனந்தப்பட்டு பரவசப்பட்டு கண்ணீர் மல்கி, இறைவா எனக்கு அருள் கொடுக்க வேண்டும் என்று இறைஞ்சுகின்ற நேரத்திலும், எதுவுமே நடக்காதது போல், தன் இடத்தைவிட்டு அசையாமல், ஆபீஸ் ரூமில் ரசீது போட்டும், பன்னீர், வீபூதி விற்பது போன்ற வேலையை தொடர்ந்து செய்து கொண்டும் காபி, தண்ணீர் கூட அருந்துவதற்கு வெளியே போகாமல் தன் இடத்திலேயே "கர்மமே கண்ணாக" இருந்து வந்த ஒரு சிறந்த அடியார் யார் என்று கேட்டால் எல்லோரும் உடனே கரையாம்புத்தூர் பங்காருரெட்டியார் சுவாமிகள் என்று சொல்லிவிடுவார்கள். அப்படிப்பட்ட மாமனிதரை பார்ப்பது மிகவும் அரிது.

சட்டையே அணியாத அந்த மாமேதை எதற்கும் சட்டை செய்யாதவர். தனக்கு சரி என்ற பட்டதை செய்ய அஞ்சாதவர். மற்றவர்கள் குறை கூற இடம் அளிக்காதவர். தன் கையிலிருந்த பணத்தை சங்கத்திற்கு கொடுப்பாரே தவிர சங்கப் பணத்தில் பைசா கூட செலவு செய்ய முற்படாதவர். சரியாக கணக்கு முடித்து விட்டுதான் ஊருக்கு செல்ல வேண்டும் என்று பிடிவாதமாக செயல்படக்கூடியவர். யாரையும் மனம் நோக பேசமாட்டார். ஒரு கை செய்யும் உதவியை மற்றொரு கைக்கு தெரியாமல் செய்ய வேண்டுமென்று சொல்பவர். ஆண்டவரிடமும், அருள்சக்தி அன்னையிடமும் ஆழ்ந்த பக்தி கொண்டவர். அடியேனுடன் மிகவும் நெருங்கி பழகினார் என்ற முறையில் அவருடைய பணி மிக அற்புதமானது என்று நான் கூறமுடியும். அப்படிப்பட்ட நல்ல மனிததெய்வத்தை இளம் வயதிலேயே பிரிந்துவிட்டதை எண்ணி எண்ணி மனம் வேதனை அடையாத நாளே கிடையாது.

அருள்சட்டத்தில் உள்ள அடியார்கள் தொண்டர் பணி செய்திட வேண்டுமென்று மாம்பலம் ஸ்வாமிகள் அடிக்கடி சொல்லுவார்கள். அடியார்கள் பணி செய்து இறைவனை அடைந்தவர்களின்

வரலாறுகளை நன்கு படித்த நம் பங்காரு ஸ்வாமிகள் கடைசி வரை சட்டத்தில் தான் இருந்து மடியவேண்டும் என்று அவாக் கொண்டவர். தன் சம்பந்தி ஆஸ்பத்திரிக்கு போக வற்புறுத்தியது போது கூட, என்ன ஆனாலும் அருட்சட்ட வழியை விடமாட்டேன் என்று கடைசி மூச்சு வரை வாழ்ந்து காட்டியவர். திரு. கவரப்பட்டு ராமசாமிரெட்டியார் அவர்கள் இரெட்டியப்பட்டியிலிருந்து அருள் பிரசாதம் எடுத்து செல்வதற்குள் அவர் ஆவி பிரிந்து விட்டதே என்று சொல்லி கண்கலங்கினர். அப்படி எல்லா அடியார்களிடமும் அன்பு கொண்ட திரு. பங்காரு ரெட்டியார் அவர்கள் ஒரு துறவியைப் போன்றே வாழ்ந்து காட்டியவர் என்று கூறி என் விளக்கத்தை நிறைவு செய்கிறேன்.

## தவத்திரு. R.D. சுப்புராமரெட்டியார் அவர்கள்



ஒரு நல்ல அரசியல்வாதியாகவும், ஒரு சிறந்த ஆன்மீகவாதியாகவும், வாழ்ந்தவர் நம் "R.D.S." என அழைக்கப்பெரும் R.D. சுப்புராமரெட்டியார் ஆவார். இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் அருட்சங்கத்திற்கு தலைவராக பல ஆண்டுகள் இருந்து பல அரிய காரியங்களை செய்து முடித்தவர். கோடி அர்ச்சனை, கும்பாபிஷேகம், பாதயாத்திரை, அடியார்கள் இல்லங்களில் லட்சார்ச்சனை, குருபூஜை விழாக்கள், ரேவதி, வசந்தவிழா, நவராத்திரி விழா இப்படி பல விழாக்களை முன்னின்று நடத்தியவர். ஸ்ரீலஸ்ரீ அருள்சக்தி அன்னையார் இடத்தில் அளவுகடந்த அன்பு கொண்டவர். நல்ல நிர்வாகத்திறமையும், எதையும் சீர்தூக்கிப் பார்த்து பதில் சொல்லும் பக்குவமும், கோபமே வராமல் அன்பாக அடியார்களிடத்தில் நடந்து கொள்ளும் விதமும், சுத்தமான, கம்பீரமான தோற்றமும் உடைய நம் ரெட்டணை ஸ்வாமிகள் செய்த செயல்கள் மிகவும் போற்றத்தக்கதாகும்.

அவர்களுடன் பல இடங்களுக்குச் சென்று அன்போடு பழகி அவருக்கு வேண்டிய உதவிகளை செய்து வந்தமையினால் எனக்கு அவரைப்பற்றி நன்கு தெரியும். குறிப்பாக அவர்கள் சங்கத்தின் மூலம் நமது ஆண்டவர் திருக்கோவில் அரசாங்க கைவசம் போகாவண்ணம் பாதுகாத்தமை ஆண்டவரின் அறுபதாவது குருபூசையன்று அரசாங்க மந்திரிப் பதவியில் இருந்த திரு. R.M. வீரப்பன் மூலம் ஆண்டவர் பெருமையை எடுத்துரைத்து இரெட்டியப் பட்டியில் மேடைச் சொற்பொழிவு ஆற்றவைத்தலைகள் முக்கியமானவைகள். அவருக்கு அடியார் உலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது.

## அருட்சட்ட வளர்ச்சிக்கு அடியார்களின் பங்கு

நம் குருநாதர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் வாழ்ந்த காலத்தில் பல அடியார்கள் இல்லத்திற்கு சென்று அவ்வூரில் உள்ள மற்ற அடியார்களையும் அங்கு வரவழைத்து அனுக்கிரஹம் செய்து அவர்களுடைய ஐய்யங்களைப் போக்கி சட்ட வளர்ச்சியை ஏற்ப்படுத்தினார்கள் என்று "வழிகாட்டும் வான் பொருள்" நூல் மூலமாக அறிகிறோம். அவர்கள் சென்ற ஊர்களிலெல்லாம் பல உற்சவங்கள் நடந்ததாகவும், இந்துக்களும், முகம்மதியர்களும், கிருஸ்த்தவர்களும் கூட ஒன்றாக சேர்ந்து விழா நடத்தியதாகவும் அவருடைய வரலாறு நமக்கு விளக்குகிறது. அவர் மறைந்து 71 ஆண்டுகள் ஆன பின்பு கூட, இன்றும் பல ஊர்களில் லட்சார்ச்சனை விழா மிகச் சிறப்பாக நடைபெறுவதை கண்கூடாக காண்கிறோம்.

சாதாரணமாக துவக்கப்பட்ட இந்த லட்சார்ச்சனை விழா ஒவ்வொரு வருடமும் வளர்ச்சி பெற்று பலப்பல புதிய நிகழ்ச்சிகளை கொண்டதாக அமைந்து காண்போருக்கு பரவசமும் பக்தியும் ஏற்ப்பட வழிவகுத்து வருகிறது. எனவே இனி வருங்காலத்தில் எல்லா ஊர்களிலும் உள்ள அருட்சட்ட அடியார்கள் ஆங்காங்கே ஒன்று சேர்ந்து இப்படிப்பட்ட லட்சார்ச்சனை விழாவை சிறப்பாக நடத்த வேண்டுமென கேட்டுக் கொள்கிறேன். அந்த நேரத்தில் நம் ஆண்டவர் படம், அருள் சக்தி அன்யைார் படம், மற்றும் "வழிகாட்டும் வான் பொருள்", மூவர் அர்ச்சனைக் கொத்து போன்ற ஆண்டவர் புத்தகங்கள் கட்டாயம் விற்பனைக்கு வைக்க வேண்டும். புத்தகங்களும் போட்டோக்களும் அதிக அளவில் விற்றால்தான் சட்ட வளர்ச்சி ஏற்ப்படும். ஒருபக்கம் நம் ஆண்டவர், மறுபக்கம் அருள் சக்தி அன்னை உள்ள வெள்ளி டாலர்கள், ஆண்டவருடைய பொன்மொழிகள் எழுதப்பட்ட சிறு பிளாஸ்டிக் பிளேட்டுகள், குழந்தைகள் சட்டையில் அணியும் விதம் பேட்ஜுகள் மற்றும் ஆண்டவர் பாடல்கள் அடங்கிய ஆடியோ கேசட்டுகள், கோவில் விழா வீடியோ கேசட்டுகள், வில்லுப்பாட்டு கேசட்டுகள் எல்லாம் எங்கும் கிடைக்க செய்யவேண்டும்.

அருட்சட்டத்தில் தீவிரமாக உள்ளவர்கள் தன் இல்லத்திற்கும், வியாபார இடங்களுக்கும், மற்றும் பொதுவான ஸ்தாபனங்களுக்கும் நம் ஆண்டவருடைய பெயரையும், ஸ்ரீ அன்னையாரின் பெயரையும் வைத்து பலருக்கு அவர்களுடைய பெருமை தெரிய வழிவகுக்க வேண்டும்.

ஆண்டவருடைய உருவப்படத்தை அழகாக அலங்கரித்து ஊஞ்சலில் வைத்து பாடினால் ஏற்ப்படும் ஆனந்தம் அளவில் அடங்காது. அதேபோல் அவர் படத்தை தோளில் வைத்துக் கொண்டு

ஊர்வலம் வந்தாலும் நெஞ்சமெல்லாம் நிறைந்திருக்கும் என்பதை நம்மில் பலர் இன்றும் உணர்ந்திருப்பார்கள். இப்படிப்பட்ட புறப்பாடு உற்சவம் கட்டாயம் ஒவ்வொரு ஊரிலும் ஏற்படுத்துவது நல்லது. வயதானவர்களுக்கும், கால் நடக்கமுடியாதவர்களுக்கும் மற்றும் கோவில்களுக்கு செல்ல முடியாதவர்களுக்கும் ஆண்டவரே நேராக வந்து தரிசனம் கொடுத்து ஆசீர்வதித்ததாக அந்தக் காலத்தில் சொல்வார்கள். அதற்காகத்தான் வீதி உலா வருவதாக தவத்திரு சாதூராம் ஸ்வாமிகள் கூறியுள்ளார்கள். அப்படிப்பட்ட நேரங்களில் நல்ல மங்கள வாத்தியமும், தாரைதப்பட்டை, வாணவேடிக்கை போன்றவைகளையும் ஏற்ப்பாடு செய்து அடியார்களும் ஆண்டவர் பட ஊர்வலத்துடனே கடைசி வரை போய் வரவேண்டுமென்று நம் மாம்பலம் ஸ்வாமிகள் கட்டளையிட்டுள்ளார்கள். பல அடியார்கள் ஒன்று சேர்ந்து ஏற்ப்பாடு செய்யும் இப்படிப்பட்ட விழாக்கள் பல நாட்களுக்கு அவர்களுடைய நெஞ்சைவிட்டு அகலாது என்பது அனுபவித்தவர்களுக்கு நன்கு தெரியும்.

வசதி படைத்த அடியார்கள் இரெட்டியப்பட்டியிலும் பிள்ளையார் குப்பத்திலும் கட்டிடங்கள் கட்டி அடியார்கள் தங்குவதற்கு வழி செய்ய வேண்டும். திருச்செந்தூரிலும், திருப்பதியிலும், இன்றும் பல ஸ்தலங்களில் இருப்பது போல் இங்கும் ஏற்ப்பாடு செய்ய வேண்டும். அப்படிசெய்தால் கட்டாயம் சட்ட வளர்ச்சி அடையும். யாரையும் எதற்கும் பணம் கேட்கக் கூடாது என்பது சட்டத்தின் கொள்கை. எனவே ஒவ்வொருவரும் கேட்காமலேயே அவர்கள் சக்திக்கு ஏற்ப இப்படிப்பட்ட காரியங்களை மனப்பூர்வமாக செய்து வருவது நல்லது.

அருட்சட்ட அடியார்கள் அடிக்கடி கடிதம் மூலமாகவோ, நேரடியாகவோ தொடர்பு கொள்ள வேண்டும் என்று நம் ஆண்டவர் கட்டளையிட்டுள்ளார்கள். எனவே மாதம் ஒருமுறை ஒவ்வொரு சட்ட அடியாரும் பிள்ளையார்குப்பத்திற்கோ, இரெட்டியப்பட்டிக்கோ செல்வது நல்லது. அப்படி போக முடியாதவர்கள் கடிதம் மூலம்தொடர்பு கொள்ள வேண்டும். சிறு துளி பெரு வெள்ளம் என்பது போல் ஒவ்வொரு அடியாரும் ஏதாவது ஒரு சேவை செய்தாலே போதும், சட்டவளர்ச்சி மிகப் பெரிய அளவில் ஏற்ப்படும் என்பதில் ஐய்யமில்லை.

**சென்னை** - *17.*
*3-8-93*

**S.P. மூர்த்தி**
**ஆண்டவர் அருள் இல்லம்**

குருநாதர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்

அருள் உலா செய்து வந்த போது

''இந்த சாமி எப்போதும் இருக்கும்
அடியார்களுக்கு வேண்டிய அருள்
நலங்கள் அனைத்தையும் என்றென்றும்
விளைவிக்கும். இதில் அணுவளவும்
ஐயுற வேண்டியதில்லை.''

என்று அடியார்களிடம் அருளியுள்ளார்கள்.

இவ்வுண்மையை இப்போதும் அனுபவத்திற்கண்டு
வியந்து, உவந்து உருகிப் போற்றுகின்றோம்.



# இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் சங்க வெளியீடு புத்தகங்கள், போட்டோக்கள் கிடைக்குமிடம்.



★ **அருள்சக்தி அன்னை ஆஸ்ரமம்,**
பிள்ளையார்குப்பம் அஞ்சல், (வழி) பாகூர்.
கடலூர் RMS-607 402.

★ **K. S. கிருஷ்ணமூர்த்தி,**
அருள்சக்தி அன்னை இல்லம்,
41, பிஞ்சால சுப்ரமணியன் தெரு,
தி. நகர், சென்னை-600 017.

★ **S. P. மூர்த்தி,**
லக்ஷ்மி ஏஜன்ஸீஸ்,
20, கோபாலகிருஷ்ண தெரு,
தி. நகர், சென்னை-600 017.